SRI S. NAGARAJA MONIGAR: சேலம் ஜில்லாவில்கூட ஆரம்பிக்கப்பட்ட பகுதியில் சரிவர வேலை செய்யவில்லை என்று அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா? ஆகையால் பழைய முறையில் இரண்டு மாடுகள் கட்டி ஓடுகிற செக்குகளுக்கும் ஆதரவு அளிக்க ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஆதரவு அளிப்பது பிரச்சனை அல்ல. இது சரிப்படவில்லை. புதிய வார்தா முறைச் செக்குகளை ஏற்றுக்கொள்கிறார்கள்.

SRI A. VEDARATHNAM: இந்தச் செக்கில் ஆட்டுகிற எண்ணெ விற்பனையில் அரசாங்கம் மானியம் கொடுத்து வருகிறதா? அப்படியானால் அதன் விவரம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: செக்கில் ஆட்டப் படுகிற எண்ணெக்கு மிகுந்த கிராக்கி உண்டு. அதற்கு மானியம் அவசியம் இல்லை.

SRI A. GOVINDASAMY: வார்தா செக்கில் ஒற்றை மாட்டைக் கட்டி ஓட்டுவது மாட்டுக்குச் சிரமமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறதே. அதனால்தான் இதற்கு ஆதரவு இல்லையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: மாடுகளுக்கு சிரமம் ஒன்றும் இல்லை. அதற்குத் தகுந்த மாடுகளைப் போட லாம். அதை ஓட்டுகிறவர்களுக்குப் பிடிக்கவில்லை. அது ரொம்பப் பழமையானது என்று நினைக்கிறார்கள்.

*Madras Pawn Brokers Act and Madras Money Lenders Act*

* 896 *Q.*—SRI K. GOPALA KOUNDER: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1957-ம் வருஷத்திய லேவாதேவிக்காரர்கள் சட்டம் 16—10—1959 முதல் அமுலில் வந்த பிரதேசங்களில் சென்னை கொதுவைக் கடன்தாரர்கள் சட்டமும் அமுலிலுள்ளதா?

(ஆ) இரண்டு விதமான வியாபாரமும் செய்பவர்கள், இரண்டு விதமான (இரண்டு சட்டப்படியும்) லைசென்ஸ் பெற வேண்டுமா?

(இ) இல்லையானால் எந்த சட்டப்படி லைசென்ஸ் பெற வேண்டும்?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) The Madras Money Lenders Act has been brought into force in the Madras City and the municipalities of this State with effect from the 16th October 1959. The Madras Pawn Brokers Act is in force in all these areas except in the Kanyakumari district and Shencottah taluk of the Tirunelveli district.

(*b*) The answer is in the affirmative.

(c) Does not arise.